கடவுள் துணை.

திருவண்ணாமலை

# தீபரத்தினம்.

இஃது,

சிறுமணவூர்

முனிசாமிமுதலியார்

அவர்களால்

இயற்றப்பட்டு,



தமது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1905.

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத் தயாராயிருக்கும்

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வால்யூம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வால்யூம் | 4 | 0 | 0 |
| இந்துலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பீனல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசிப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | I | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபாலியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| கஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| வைகுண்ட ஆருடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகத்ரக்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோதிடகா | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்தாமணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவாரணம் | 0 | 2 | 0 |
| கருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| அவிவேகபூர்ணகுருகதை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச மகத்துவம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,

ஐயனவூர்-முனிசாமிமுதலியார்,

நெ. 12. சட்டண்ணநாயக்கன் வீதி,

நூனை போர்டு, மதராஸ்.





அண்ணாமலையார் துணை.



# திருவண்ணாமலை தீபரத்தினம்.

### விருத்தம்.

இந்திராதிமுதன்முனிவர் கொண்டாடுதீபமென் டிசைகாண வோங்குதீபம், யிமையபர்வதவல்லி கண்கொண்டதீபமிது யென்வினையறுக்குதீபம், சந்திராதித்தனொடு அட்டவயிரவரெவரும் சரணெனவணங்குதீபம், சாலோகசாமீப சாரூபமளவிடா சாயுச்யதீபமிதுவே, சிந்தையில்நினைப்போது ஐம்பூதசாட்சியாய் தெரிசனம்செய்தபேர்க்கு, செய்தவினையேவல்கொடு சூன்யமுதல்பிணியெலாம் ஜென்மாந்திரத்துமணுகா, கந்தமலர்சோலைகுளிர் தீம்புனல்நிரைச்சாலை கனகமலைமீதிலென்றும், மன்னார்மலர்க்கண்மால் விண்ணயரன்காணா அண்ணாமலைத்திபமே. ௧

பரிதிமதிதிருவலம் செய்துத்தொழுந்தீபம் பங்கயன்வணங்குதீபம் பாரளந்தோன்தேடி காணாததீபமது பார்வதிக்கண்டதீபம், சரியைகிரியாயோக ஞானமோனத்தவர்கள் சதாநிஷ்டைசெய்யுந்தீபம், ஜனகாதிமுனிவர்மன மகலாததீபமது சச்சிதானந்ததீபம், விரிவானவெண்பத்து நான்குலட்சசிவ பேதத்தமர்ந்ததீபம், வினைப்பயனறிந்தந்த கருவிடைப்போக்கியே வேடிக்கைபார்க்குந்தீபம், மருமலர்சோலைகுளிர் திம்புனல்நிரைச்சாலை மர்ரமலைமீதிலென்றும், மன்னார்மலர்க்கண்மால் விண்ணயன்காணா அண்ணாமலைத்திபமே. ௨

பிஞ்ஞகமதிநதியைமுடி மேற்பூண்டதீபமாம் பிணிமேலணிந்த
தீபம், பேரரியமறையடியு நடுமுடியுமாந்தீபம் பெண்கொடிமண
ந்ததீபம், அஞ்செழுத்தாய்பஞ்ச பூதமாயென்னுடற் காதாரமா
னதீபம், அகிலபுவனங்களுந் திக்குத்திகந்தமும் அங்கிங்கெனா
ததீபம், தஞ்சமென்றிடுமடியர் நெஞ்சைத்திருத்தியே தன்னரு
ட்காட்டுதீபம், தந்தைதாய்குருதெய்வ தமர்தாரமகவுமாய் தா
னுமாயாடுதீபம், கஞ்சமலர்சோலைகுளிர் தீம்புனல்திரைச்சாலை க
னகமலைமீதிலென்றும், மண்ணார்மலர்க்கண்மால் விண்ணாரயன்
காணா அண்ணாமலைத்தீபமே. ௩

ஜாதிமதபேதமாம் கழற்கற்றமுதியோர் சமுகத்திலங்குதீபம்,
சதுமறையும்வேதமுறு தொண்ணூற்றியாறுதத் துவமெலாம்நின்
றதீபம், சோதிமலைமீதிற் சுயஞ்சோதியாய்நின்று சோதித்தழை
க்குதீபம், சும்மாவிருக்குஞ் சுகங்கொண்டமௌனியொடு சும்
மாயிருக்குந்தீபம், நீதிபலபேசிமத வர்தமிடுமடையரது நெஞ்சை
ப்பிளக்குந்தீபம், நின்றநிலைநின்றட்ட திக்கெலாமிரவுபகல் நிர்த்
தமிடுநெடியதீபம், மாதுமலைமங்கையொடு ஆதிமலைமீதில்வளர்
மணிமந்த்ரதீபசுடராம், மண்ணார்மலர்க்கண்மால் விண்ணாரயன்
காணா அண்ணாமலைத்தீபமே. ௪

மாசிலாவாகம புராணமறையாந்தீபம் மகவாயுதித்ததீபம், ம
ன்னனதுகிரிகையைத் தன்னுதென்றத்தீபம் மலைகள்தழுவுதீபம்,
தேசமிடமாம்பொருள வற்றவற்றுந்தீபம் தென்னவனைசாய்த்த
தீபம், தேவரிந்திரன்முனிவ ரமரர்கின்னரருகர் தேடக்களித்த
தீபம், ஆசைவன்பாசமா மாசரக்கருணையமுதன்பர்க்குஉதவுதீ
பம், அன்பாம்பலிப்பூண்டு சிவசிவவெனத்தேம்பு மவற்கேயி
னிக்குந்தீபம், மாசின்மலர்சோலைகுளிர் தீம்புனல்திரைச்சாலை
மந்த்ரமலைமீதிலென்றும், மண்ணார்மலர்க்கண்மால் விண்ணாரயன்
காணார் அண்ணாமலைத்தீபமே. ௫

---

## அருணாஜலரத்தினம்.

கண்ணாரமுதே மணிக்குன்றே கர்த்தாவெந்தனுயிர்க்குயிரே
விண்ணாருலகை முதலெலாவைக்கும் வேந்தேயென்னைப் பெற்றோனே
பண்ணாரயனுந் திருமாலும் பரவிக்காணா பழம்பொருளே
அண்ணாமலையாம் பெர்தாபார் உருவேயென்னை யாளாயோ. ௧

வினையாம்பகுதி பெருஞ்சமுக்கால் வந்தவுடலாம் . யிதைச்சுமந்து
நினைவுமழிந்து நெறியழிந்து நின்றேனையோ. புவிமீது
உனையேதுதிக்க விதியறியா துழலுஞ்சிறியேன் உளவறிந்து
மனமேதிருத்தி யெனையாளும் மருந்தேயண்ணா மலையானே. உ

எல்லாப்பிறவி யெடுப்பதிலும் மிநுகாணருமை யெனவுலகம்
சொல்லாற்கேட்ட தன்றியொரு சுகமுங்காணேன் சுருதிமுதல்
யெல்லாந்துதிக்கும்பெருமானே யென்போல்யேழைகண்டாயோ
கல்லாச்சிறியே னானுங் கர்த்தாயென்னை யாள்வாயே. ௩

மானார்மோக வலையிலந்தோ மனமேபடுமா ரதைவிரிக்க
கானார்கன்னின் கலைவாரே கருதத்தகுமென் கருத்துளவை
வானார்பரவும் அருணேசா வரியாய்வரியாப் போலிருந்தால்
நானுவுரைக்க வினைக்காணேன் நாதாகடைக்கண் பாராயோ. ௪

பொன்னும்பொருளும் புவிவாழ்வும் போதும்போதுமின்னமொ
அன்னைக்கருவில் போக்காமல் ஆளக்கருதா தாகெட்டேன் [ரு
உன்னைவிடவோர் பெருந்தெய்வம் உலகிற்பேசக் கேட்டறியேன்
யின்னமுறைக்க மாட்டேனா னெங்கும்புகுவ மாட்டேனே. ரு

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ணாமலை
## கார்த்திகை தீபதெரிசனக்கும்மி.

---

விநாயகர்துதி-நேரிசைவெண்பா.

பெண்ணாரமுதேகேள் பேருரவாழ்ந்திருசூழ்
அண்ணாமலையா ரடிகளுக்குப்—பண்பாக
கும்மிதனைப்பாடுதற்குக் கும்பமதவைங்கரனைச்
செம்மையுடனேமனதிற் சேர்.

கும்மி.

கும்மியடிபெண்கள் கும்மியடி—மனக்
குறைகள்நீங்கவே கும்மியடி
செம்மையாகத்திரு அண்ணாமலைகண்டு
சேவித்துகும்மி யடியுங்கடி. க

## கணபதி துதி.

முத்தொழில்வேந்த னெனவுதித்து—வந்து
முன்னான்குகன்னன் தனையளித்த
அத்தனண்ணாமலை தீபக்கும்மிசொல்ல
ஆனைமுகவனுங் காப்பாமே. ௨

## சுப்பிரமணியர்-துதி.

ஆனைமுகவ னடிபணிந்து—திரு
அண்ணாமலைதீபக் கும்மிசொல்ல
வானவர்கோனும் ஆறுமுகனை
வணங்கிக்கும்மி யடியுங்கடி. ௩

## வாலைத்துதி.

ஆறுமுகவ னடிபோற்றி—ஆதி
அம்பிகைவாலைப் பதம்போற்றி
கோரியண்ணாமலை தீபதெரிசனக்
கும்மியைப்பாடி யடியுங்கடி. ௪

## சரஸ்வதி துதி.

சித்தர்கள்யாத்திய அண்ணாமலைவளர்
தீபதெரிசனக் கும்மிசொல்ல
சத்திமித்ரோமென ஆடுஞ்சரஸ்வதி
தாயார்பொற்பதங் காப்பாமே. ௫

## கவிவேந்தர் வணக்கம்.

காதல்விளைத்திடும் அன்னத்தின்முன்னொரு
காகமுங்காவென்று கத்துதல்போல்
பூதலவாணர்முன் சொல்லத்தொடர்ந்தவென்
புன்மொழியேற்று மனம்பொறுப்பீர். ௬

## திருவண்ணாமலை உச்சிவிநாயகர் துதி.

மல்லிகைமுல்லை யிருவாட்சி—புன்னை
மற்றுமுண்டான மலரெடுத்து
உல்லாசமாகவே அண்ணாமலைவளர்
உச்சிகணேசனைப் போற்றுங்கடி. ௭

கார்த்திகை தீபத்தைப் பாருங்கடி—செய்த
பாபத்தைத்தீர்க்கவே கோருங்கடி.
தீர்த்தமுழுகிலும் ஸ்நானங்கள்செய்துமே
சுத்திவலமாக வாருங்கடி. அ

வல்லாளன்கோபுரம் பாருங்கடி—இதை
வர்ணிக்கயாராலே கூடுமடி.
பல்லுயிர்போற்றிய அண்ணாமலையாரைப்
பணிந்துகும்மி யடியுங்கடி. கூ

வல்வினையெல்லா மகற்றுமலை—பிது
வானவரோதிய வேதமலை
நல்லவரந்தரும் அண்ணாமலையாரை
நாடிக்கும்மி யடியுங்கடி. ய

தீராவினைகளைத் தீர்க்குமலை—அந்த
தென்னவன்றன்னை யுதைத்தமலை
சீராயன்பரைக் காற்குமலைபிது
சித்திரஅண்ணா மலையாண்டி. யக

மானேஅண்ணா மலையாண்டி—அவன்
மங்கையேஉண்ணா முலையாண்டி
தேனேயிருவர் பதம்வேண்டி—மலை
தீபதெரிசனம் பாருங்கடி. யஉ

கிரேதாயுகத்திலே தங்கமலை—அந்த
திரேதாயுகத்திலே பொன்னுமலை
துவாபரயுகத்தில் வெள்ளிமலை—இந்த
கலியுகத்திலே அண்ணாமலை. யங

பாருங்கடிமலை யேருங்கடி—செய்த
பாவந்தீரக்கடைத் தேறுங்கடி
கோரும்வரந்தரும் அண்ணாமலையாரைக்
கொண்டாடிக்கும்மி யடியுங்கடி. யச

அண்ணாமலைபா யமர்ந்தாண்டி—அவன்
அன்றயனுக்காய் வளர்ந்தாண்டி
மின்னாதியாருக்குங் கோனாண்டி—அவனை
வேண்டிக்கும்மி யடியுங்கடி. யரு

தில்லைப்பதியா னிவன்தாண்டி—அந்த
திருப்பதியு மிவன்தாண்டி
தொல்லைவினைகளை அண்ணாமலையானைத்
துதித்துக்கும்பி யடியுங்கடி. ௰௬

திருக்குளத்தலங் காரங்களுஞ்—சிவ
ஞானிகள்செய்ப ணுட் டானங்களும்
விருப்பமாகவே அன்பர்களெற்றியில்
வெண்ணீ றலங்காரம் பாருங்கடி. ௰௭

பொல்லாப்பாவ மதைப்போக்க—தன்னைப்
போற்றுமடியார் தமைக்காக்க
வல்லவனாகிய அண்ணாமலையானை
வணங்கிக்கும்பி யடியுங்கடி. ௰௮

சங்கராசம்போ சதாசிவனே—ஓம்
சங்கரகெங்கா தரனேயென்றும்
திங்களையணிந்தவா யெங்களைக்காரென்றும்
தீபதரிசனஞ் செய்யுங்கடி. ௰௯

அரியுங்காணு வடியாண்டி—அந்த
அயனுங்காணு முடியாண்டி
பிரியமாகவே அண்ணாமலையானைப்
பேசிக்கும்பி யடியுங்கடி. ௨௰

சர்க்கரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து—மலை
சன்னதிமுன்பாக வந்துநின்று
அக்கரையாகவே யெத்தனையோகோடி
அன்பாய்தொழுவதைப் பாருங்கடி. ௨௧

பாருங்கடிபதி னாறுகால்மண்டபம்
பாதையில்நூறுக்கால் மண்டபமும்
நேராகச்சன்னதி யுள்ளேதிருக்குளம்
நேர்ந்தசிங்காரத்தைப் பாருங்கடி. ௨௨

ஆயிரங்காலுள்ள மண்டபமாம்—இது
ஆதியில்சிற்பிகள் கட்டினதாம்
தாயாருண்ணாமுலை சன்னதிமுன்பாக
தாழ்ந்துக்கும்பி யடியுங்கடி. ௨௩

எண்ணிக்கணக்கிடக் கூடாதவன்பர்கள்
எத்தனையோகோடி மானிடர்கள்
அண்ணாலண்ணாமலை தீபசேர்வைசெய்ய
அன்பாய்வாரதைப் பாருங்கடி. ௨௪

நந்திதெரிசனம் பாருங்கடி—அங்கே
நாதர்தெரிசனந் தேடுங்கடி
முந்தித்திருக்குளம் மூழ்கியண்ணாமலை
மோனப்பிரணவம் பேசுங்கடி. ௨௫

மோனமெனும்பெண்ணை யுள்ளாக்கி—உள்ளே
மூன்றுமிரண்டையும் ஒன்றாக்கி
ஞானவிளக்கென்னுங் கார்த்திகைத்தீபத்தை
நாடிக்கும்மி யடியுங்கடி. ௨௬

என்றைக்குஞ்சொந்தஞ் சுடுகாடு—நமக்
கில்லறத்தொல்லை யிடுகாடு
அன்றுவல்லாளனை யாண்டுகொண்டவெங்கள்
அண்ணாமலையாரை வாழ்த்துங்கடி. ௨௭

வீணைகொண்டு மயங்காதே—வெளி
வேஷத்தைப்பூட்டித் தியங்காதே
காணாதகாக்ஷியா மண்ணாமலைநாதர்
கற்பூரதீபத்தைப் பாருங்கடி. ௨௮

சோத்தால்வந்தப் பெரும்பொதியாம்—இது
சும்மாவளர்த்துக் கெடுக்காமல்
பார்த்தேயண்ணாமலை கார்த்திகைதீபத்தைப்
பணிந்துக்கும்மி யடியுங்கடி. ௨௯

காலனும்பட்டக் கதையறிந்து—கலி
காலத்தைவீணிலே போக்காதே
ஞாலம்பரவிய அண்ணாமலைத்தீப
நட்சத்திரக்கும்மி யடியுங்கடி. ௩௰

பொன்னும்பொருளு மிருந்தவிடமுன்
பிள்ளைத்துடருஞ் சுடலைமட்டும்
தன்னைமலைத்துத் தியங்காதே—ஒரு
தடமாய்க்கும்மி யடியுங்கடி. ௩௧

வாயால்வேதம் படிக்காதே—வாழ்
ணாட்களைவீணாய்க் கெடுக்காதே
தாயாருந்தந்தையு மண்ணாமலையென்று
தனித்துக்கும்மி யடியுங்கடி. ௩௨

மங்களந்தங்கிய ராமலிங்கப்பிள்ளை
மல்லிகையென்னு மலர்ப்பதத்தை
பொங்கமுடன் தினம் போற்றுமுனிசாமி
புகழுங்கும்மியை வாழ்த்துங்கடி. ௩௩

அகத்தியர்தந்தத் தமிழ்வாழ்கத்—திரு
அண்ணாமலையார் சுகம்வாழ்க
ஜெகத்தையின்றவ ளுண்ணாமுலைவாழ்க
சிராய்மங்களம் பாடுங்கடி. ௩௪

இச்சையுடன்முனி சாமிசொன்னகும்மி
யெங்கும்விளம்பர மாகவென்று
அச்சிலிட்டானுங் கோபாலராஜென்
றன்னமேகும்மி யடியுங்கடி. ௩௫

திருவண்ணாமலை திபரத்தினம்,

முற்றிற்று.

---

# ஆநந்தக்களிப்பு.

தீபத்தைப்பார்மனக் கண்ணே—செய்த
பாவத்தைபோக்கநற் பக்குவமண்ணே (தீபத்)

கோபமருந்திடுந் தீபம் மனங்
கொண்டக்கருத்தை நிறைவேற்றுந்தீபம்
சாபந்தொலைத்திடு தீபம் மாளா
ஜனனக்கடலில் நுழைக்காததீபம் (தீபத்)

பிறவியறுத்திடுந்தீபம் யினி
பிறவாவரந்தரும் பொன்மலைதீபம்
யிறவாவரந்தரும் தீபம் நல்ல
யென்னைக்கொண்டார்களை தன்மயமாக்கும் (தீபத்)

நானென்ற ஆணவகாக்கை அதை
நாடவொட்டாமலே வோட்டினல்யாக்கை
ஏன்கிழேவீழுது சாக்கை இந்த
யெத்தரிந்துஞான தீபத்தைநோக்கே (தீபத்)

மோனப்பாலூட்டிடுந் தீபம் நல்ல
முத்திக்குவித்தாய் முளைத்திட்டதீபம்
ஜானப்பாலூட்டிடுந் தீபம் வேத
நான்மறைமீதில் நடித்திடுந்தீபம் (தீபத்)

பந்தமகற்றிடுந் தீபம் பரி
பக்குவமாக்கிப் பதந்தருதீபம்
சிந்தைதிருத்திடுந் தீபம் சிவ
சின்மயாநந்த சிதாகாசதீபம் (தீபத்)

தந்தையுந்தாயுமாந் தீபம் அது
தானுமாய்நீயுமா யாடிடுந்தீபம்
மைந்தனைப்போலான தீபம் நல்ல
மனமுடையார்க்கே யினமானதீபம் (தீபத்)

காண்டற்கரிதான தீபம் கொடுங்
காலனைமண்மேலே வீழ்த்தியதீபம்
தாண்டவமாடிய தீபம் யென்னை
தன்வசமாக்குந் தலையானதீபம் (தீபத்)

விள்ளவடங்காத தீபம் நானு
வேதமறையு விரிவானதீபம்
உள்ளமடங்கிய தீபம் மன
ஊத்தையறுத்தென்னை காத்திடுந்தீபம் (தீபத்)

கண்ணுக்குக்கண்ணான தீபம் மனக்
கண்ணாலேகண்டோரை விண்ணவராக்கும்
பண்ணுக்கிரங்கிய தீபம் இந்த
பாரண்டமெல்லாம் பரவியதீபம் (தீபத்)

சொல்லற்கரிதான தீபம் இது
சுத்தசைதன்னிய சுயஞ்சோதிதீபம்
அல்லலறவின்ற தீபம் திரு
அண்ணாமலையென்ற மைந்தொளிர்தீபம் (தீபத்)

காணார்கள் காணாததீபம் திருக்
கனகமலையாங் களஞ்சியதீபம்
சேணாடர்போற்றியதீபம் யெந்தன்
சிற்றறுப்போக்கி சிவமாக்குந்தீபம் (தீபத்)

திருச்சிற்றம்பலம்.

